REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

அறிவு

மோரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பது போல அறிவை வளர்த்துக் கொண்டு பயன்பெறவேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

பொதுநலம்

இன உணர்வு, பொதுநல உணர்வு யோக்கியத் தன்மை முதலியவை ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டும்.

-தந்தை பெரியார்

மலர்: 4 சென்னை 20-7-1980 ஞாயிறு (★) ❋ ● ❋ (★) வெளியூர் 21—7—1980 திங்கள் இதழ் 252

ஆரணி சண்முகம் பெருமிதம்

## நெசவாளர்களுக்கு புரட்சித்தலைவர் அரசு செய்த நன்மைகள்

சென்னை, ஜூலை 20-புரட்சித் தலைவர் அரசுதான் நெசவாளர்களுக்கு ஏரானமான நன்மைகளைச் செய்திருக்கிறது என்று ஆரணி சண்முகம் கூறினார்

சட்டமன்றத்தில் கைத்தறித்துறை மானியத்தின் மீது கழக உறுப்பினர் ஆரணி ஏ சி சண்முகம் பேசும்போது கூறியதாவது:-

என்னுடைய ஆரணி தொகுதியில் மட்டும் கைத்தறி நெசவாளர்கள் 35 ஆயிரத்திற்கும் அதிகமானவர்கள் இருக்கிறார்கள்.

புரட்சித்தலைவர் ஆட்சியிலே மிகவும் பெருமைப்படக்கூடிய முறையிலே நன்மைகளை செய்திருக்கிறார் வெளி மாநிலத்திற்கு ஏற்றுமதி செய்த பட்டுசேலைகளின் மூலமாக கிடைத்த லட்சக்கணக்கான ரூபாய்கள் மூலம் அந்த தொகுதி பலன் அடைந்திருக்கிறது.

### விற்பனை உயர்வு

1975-76-ம் ஆண்டில் கைத்தறி விற்பனை 15 கோடி ரூபாயாக இருந்தது புரட்சித்தலைவர் ஆட்சியில் 1979-80ம் ஆண்டில் 36 கோடி ரூபாய்க்கு விற்பனை உயர்ந்

(8-ம் பக்கம் பார்க்க)

கருணாநிதிக்கு இந்திரா காங்கிரஸ்

# எம். பி.க்கள் எதிர்ப்பு

## கவர்னருக்கு எதிரான போக்கிற்கு கண்டனம்

சென்னை, ஜூலை 20- தமிழக கவர்னருக்கு எதிராக கருணாநிதி நடத்திவரும் 'இயக்கத்'துக்கு இந்திரா காங்கிரஸ் எம். பி.க்கள் பலர் எதிர்நிலையை எடுத்திருக்கின்றனர். தனது சுயநலம் காரணமாக கருணாநிதி எடுத்துவரும் நிலைக்கு இந்திரா காங்கிரஸ் எம். பி.க்கள் பலியாகிவிடக்கூடாது என அவர்கள் கருதுகிறார்கள்.

தமிழக கவர்னர் பட்வாரிமீது திமுக தலைவர் கருணாநிதி அண்மைக் காலமாக புகார்களைக் கூறி வருகிறார்.

ஆளும் கட்சிக்கு ஆதரவாகவும், எதிர்க்கட்சிகளுக்கு எதிராகவும் கவர்னர் செயல்படுகிறார் என்ற ஒரு மாயையை அவர் ஏற்படுத்த முனைந்திருக்கிறார்.

இந்தவிவகாரம்குறித்து பொய்யான ஒரு தந்தியை ஜனாதிபதிக்கும் பிரதமருக்கும் கருணாநிதி அனுப்பியது நினைவிருக்கலாம்.

அதைத்தொடர்ந்து திமுக எம் பிக்களும், இந்திரா காங்கிரசில் ஆறு ஏழு எம் பிக்களும் கையெழுத்திட்டு பிரதமர் இந்திராவிடம் ஒரு மகஜரைக்கொடுத்து, கவர்னர் பட்வாரியை மாற்றவேண்டும் என்று கோரியிருக்கிறார்கள்.

கருணாநிதியின் தூண்டுதலின் பேரிலேயே இந்த எம். பிக்கள் இந்திராவிடம் மகஜர் கொடுத்துள்ளனர். இந்த மகஜரில் திமுக எம் பிக்கள் தவிர இந்திரா காங்கிரசைச் சேர்ந்த 6 எம் பிக்கள் கையெழுத்து போட்டிருப்பதாகத் தெரிகிறது. மீதியுள்ள இந்திரா காங்கிரஸ் எம். பிக்கள் இந்த மகஜரில் கையெழுத்துப்போட மறுத்துவிட்டார்களாம்.

### சுயநலமே காரணம்

தனது சுயநலம் காரணமாகவே தமிழக கவர்னருக்கு எதிரான இயக்கத்தை கருணாநிதி ஆரம்பித்திருப்பதாகஅந்த எம். பி.க்கள் கருதுகிறார்கள்.

ஜனதா அரசினால் நியமிக்கப்பட்ட கவர்னராக இருந்தாலும், இந்திரா பிரதமரான பின் இந்திரா காங்கிரசின் அரசுக்கு விரோதமாக கவர்னர்பட்வாரி செயல்படவில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள்.

புரட்சித்தலைவர் அரசு நீக்கப்பட்ட பின் தமிழகத்தில் நடைபெற்ற கவர்னர் ஆட்சியில் மத்திய அரசு திருப்தியடையும் வகையில் கவர்னர் நடந்துகொண்டார் என்ற கருத்தும் நிலவுகிறது.

இந்த நிலையில் கவர்னருக்கு எதிராக கருணாநிதி போர்க்கொடி தூக்கியிருப்பதை தமிழக இந்திரா காங்கிரசின் பெரும்பாலான எம்.பி.க்கள் எதிர்க்கிறார்கள்.

தமிழகத்தில் கழக அரசு நீக்கப்பட்ட பின் நடைபெற்ற கவர்னர் ஆட்சியின் போது கருணாநிதி மீதுள்ள ஊழல் புகார் தொடர்பான வழக்குகளை வாபஸ் பெறுவது சம்பந்தமாக கவர்னர் மீது கருணாநிதிக்கு கோபம் ஏற்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

(2ம் பக்கம் தொடர்ச்சி)

திருப்பது பாராட்டுக்குரியது

கைத்தறி நெசவாளர்களுக்கு 1980-81ம் ஆண்டில் 1650 வீடுகள் கட்டப்பட இருப்பதை வரவேற்கிறேன்.

தனியார் மில்லை அனுமதித்தால் எலக்ஷனுக்கும் அதற்கும்ஏதோ தொடர்பு இருக்கும்என்பதைப்போல ஒரு குற்றச்சாட்டை சொன்னார்கள் ஏழாண்டு காலம் இந்த நாட்டினுடைய ஆட்சியைநீங்கள் (திமுக) நடத்தி இருக்கிறீர்கள். அப்போது பல தனிப்பட்ட நிறுவனங்களுக்கும், தொழில்களுக்கும் அனுமதி கொடுத்திருக்கிறீர்கள். இதுபோல பணத் தொடர்பு வைத்துக் கொண்டுதான் நீங்கள் (திமுக) அனுமதி அளித்தீர்களா? "தான் திருடி அசல் வீட்டுக்காரியைநம்ப மாட்டாள்" என்றுசொல்வதைப்போல அந்த உறுப்பினர் சொல்வது இருக்கிறது.

தமிழகத்தில் 3 ஆண்டுகளில் 214 நெசவாளர்கள் கூட்டுறவு சங்கங்கள் அமைந்திருப்பது நெசவுத்துறைக்குத் தமிழக அரசு செய்கின்ற சாதனையைத் தான் காட்டுகிறது.

இவ்வாறு ஏ. சி. சண்முகம் கூறினார்.

அயோத்தியா நகர்

## குடிசை மாற்றுவாரிய அடிக்கல் நாட்டுவிழா

சென்னை, ஜூலை 20- சென்னை திருவல்லிக்கேணியிலுள்ள அயோத்தியா நகரில்குடிசைப்பகுதிமாற்று வாரிய அலுவலகக் கட்டடத்திற்கு அடிக்கல் நாட்டுவிழா நடைபெறுகிறது.

வரும் 22-ந் தேதி மாலை 5 மணிக்கு நடைபெறும் இவ்விழாவிற்கு அமைச்சர் எஸ். ராகவானந்தம் தலைமை வகிக்கிறார்.

உள்ளாட்சித்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு முன்னிலை வகிக்கிறார்.

செய்தி அறநிலையத் துறை அமைச்சர் ஆர் எம் வீ அடிக்கல் நாட்டுகிறார்.

குடிசை மாற்றுவாரியத் தலைவர் டி கே கபாலி எம் எல் ஏ அனைவரும் வருமாறு அழைப்பு விடுத்துள்ளார்.

தொழில்துறை கொள்கையில்

# தி. மு. க. வினர் முரண்பாடு

## அமைச்சர் திருநாவுக்கரசு விளாசல்

சென்னை, ஜூலை 20-தொழில் துறைக் கொள்கையில் திமுக எம் எல் ஏக்கள் கொண்டுள்ள முரண்பாடான நிலையை அமைச்சர் திருநாவுக்கரசு சட்டசபையில் விளக்கினார்.

தொழில்துறை விவாதத்திற்குப் பதில் அளித்து அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:-

தொழில் துறையில் பொதுவாகஇந்தஅரசுக்கு தெளிவான கொள்கை இல்லை என்றும், தொழில் வளர்ச்சி நொண்டிக் குதிரையாகவே 3 ஆண்டுகாலமாக இருக்கிறது என்றும் கூறினார்கள்.

இந்த அரசின் தொழில் கொள்கை தெளிவாகஇருக்கிறது கிராமப்புறங்களில் சிறு தொழில் வளர்ச்சி மேம்படுத்தப்பட்டு வேலை வாய்ப்பு அதிகப்படுத்த திட்டமிட்டு செயல் படுத்திவருகிறோம்.

சிறு தொழில்' ஊரகத் தொழில் வளர்ச்சியை முக்கியமாக கருதும் அதே நேரத்தில் பெரிய தொழில்களும் இணையாக வளரவேண்டும் அதன் மூலம் சிறுதொழில்களும் வளரவேண்டும்.

சிறு தொழில்களை ஒரு கண்ணாகவும் பெரிய நடுத்தர தொழில்களைமற்றொரு கண்ணாகவும் இந்த அரசு கருதி வளர்த்து வருகிறது.

இதனைத் தன் கொள்கையாக இந்தஅரசு வகுத்துக் கொண்டு இருக்கிறது.

தொழில் வளர்ச்சியில் வேலைவாய்ப்பு என்பது முதுகெலும்பாக இருக்கிறது. இதன்மூலம் 1980-81ம் ஆண்டில் புதிதாக 3 லட்சம் பேர்களுக்கு வேலைவாய்ப்பு தர அரசு திட்டமிட்டுள்ளது.

### மாநில ஆலோசனை குழு

தொழில் வளர்ச்சிக்கு மாநில அளவில் ஆலோசனைக் குழுவினை அமைக்கவும் அரசு முடிவு செய்துள்ளது.

தொழில் அதிபர்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் நேரத்தில் அவர்களைக் கொண்ட கூட்டம் நடத்தவும் திட்டமிடப்பட்டுள்ளது.

தொழில்துறை வளர்ச்சியில் 1977 முதல் புரட்சித் தலைவர் ஆட்சியில் நொண்டிக் குதிரையாக இல்லை.

ஓடும் பந்தயக் குதிரையாகவே ஓடிக்கொண்டு இருக்கிறது.

தொழில் வளர்ச்சியில் பின்தங்கிவிட்டது என்று பேசியவர்கள் எந்த ஆதாரத்தையும் வைத்துச் சொல்லவில்லை.

### ஓடும் குதிரை

ஆனால் புரட்சித்தலைவர் ஆட்சியில் பந்தயக்குதிரையாக ஓடும் வளர்ச்சியைக் காட்ட பல ஆதாரங்களைக் காட்ட முடியும்.

(தொழில்வளர்ச்சிபற்றி பல புள்ளிவிவரங்களை விவரிக்கிறார்)

தொழில்களைத் துவக்க மத்திய அரசு தரும் உதவியைப் பெறுவதில் ரூ 10 கோடியை நாம் பெற்று இந்தியாவிலேயே முதலிடத்தில் நாம் இருக்கிறோம்

இந்தியாவில் எடுக்கப்பட்ட தொழில் ஆய்வுப்படி 1976 வரை நாம் தொழில் வளர்ச்சியில் 3-வது இடத்தில் தான் இருக்கிறோம்.

ஆகவே தொழில் வளர்ச்சி இல்லை மந்தம் இருந்தது என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை.

புதுக்கோட்டை, மாறு மதுரை, தூத்துக்குடி, ஆகியஇடங்களில்தொழில் இணையங்களை துவக்க அரசு முடிவு செய்துள்ளது

மாவட்டம் தோறும் இப்படிப்பட்ட தொழில் இணையங்களை துவக்க அரசு ஆலோசித்து வருகிறது.

கரும்புக்கு அதிக விலை தரவேண்டும் என்று மத்திய அரசிடம் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறோம்?

மத்திய அரசு 2 லட்சம் டன் சர்க்கரையை வெளிநாட்டில் இருந்து வரவழைத்து இருக்கிறது.

இந்தசர்க்கரையின் விலை கிலோ ரூ. 6.50 ஆகிறது இதற்குப் பதிலாக கரும்பின் விலையை மத்திய அரசு உயர்த்திக் கொடுத்தால் சர்க்கரையை நாம் அதிகமாக உற்பத்தி செய்து கொடுக்க முடியும். கரும்புக்கு ரூ 125 தருகிறார்கள்-மேலும் விலையை உயர்த்தும்படி மத்திய அரசிடம் கூறிவருகிறோம்.

எவ்வளவு உயர்த்தினாலும் மகிழ்ச்சியோடு ஏற்போம்.

### சிமெண்ட்

சிமெண்ட் உற்பத்தியை அதிகரிக்கவும்நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

ஆலங்குளம் சிமெண்ட் தொழிற்சாலையை மேலும் 50 ஆயிரம்டன் அதிகரிக்க விஸ்தரிக்கதிட்டமிடப்பட்டுள்ளது.

வேடசந்தூர் பகுதியில் 4 லட்சம் டன் சிமெண்ட் தயாரிக்கும் தொழிற்சாலை அமைக்க ஆலோசிக்கப் பட்டு வருகிறது.

### கருப்புக்கல் தொழிற்சாலை

கருப்புக்கல்லை தகடு போல அறுத்து பாலிஷ் போடவும் தொழிற்சாலை ஒன்று அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது. ரூ. 50 லட்சம் செலவில் இத் தொழிற்சாலை அமைக்கப்படும்.

25ஆயிரம்கதிர்கொண்ட கூட்டுறவு நூற்பாலை ஒன்றும் செயற்கைப்பட்டு கூட்டுறவு நூற்பாலை ஒன்றும் தலா ரூ.4கோடி செலவில் மதுரைதிருநெல்வேலியில் அமைக்க ஆலோசித்து வருகிறோம்.

### அசோக் லேலண்ட்

அசோக் லேலண்ட் பிரச்சினைபற்றிப் பேசினார்கள்? மாடு வருகிறது கட்டினால் கட்டு, கட்டாவிட்டால் போ என்ற நிலையில் அரசு இருப்பதாகத் தெரிவித்தனர்.

வருகிற மாடு நல்லமாடா? அது வேலைக்கு உகந்ததா என்று பார்த்து நல்ல மாடாக இருந்தால் கட்டுகிறோம்,

தின்றுவிட்டு வேறுஇடத்திற்கு செல்லும் மாடாக இருந்தால் விட்டு விடுகிறோம்.

### திட்ட அறிக்கை

அசோக்லேலண்ட் நிறுவனம் திட்ட அறிக்கை எதுவும் தரவில்லை. வேறு மாநிலங்களில் என்ன சலுகை தருகிறார்கள் என்றுதான் கூறினார்கள் அவர்கள் தந்த விவரம் நாம் தரும் சலுகைக்கு ஒத்துவரக்கூடியதாக இல்லை.

அவர்கள் கேட்ட சலுகைகள் நமக்கு ஒத்து வரக் கூடியதாக இல்லை என்று முதல்வரும் சொல்லி இருக்கிறார்.

தனியார்துறையைநாங்கள் ஊக்குவிப்பதாக எங்கள் மீது துரைமுருகன் குற்றஞ்சாட்டினார். ஆனால் அதே கட்சியைச் சேர்ந்த நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி தனியார் தொழிலுக்கு ஏன் சலுகை தரப்படவில்லை என்று கேட்கிறார்,

ரூ25கோடிக்கு சலுகை தந்திருந்தால் இப்படி 25கோடிசலுகைதரலாமா என்று கேட்பார்.

தொழில் கொள்கையில் நாங்கள் தெளிவாக இருக்கிறோம். அதே அசோக் லேலண்ட் நிறுவனம் ஒருரிலும் எண்ணூரிலும் உற்பத்தியை விஸ்தரிக்க திட்டம் கொடுத்திருந்தார்கள். அதற்கு உதவுகிறோம்.

ஆகவே அசோக் லேலண்ட் நிறுவனம் மீது நமக்கு விருப்பு வெறுப்பு இல்லை.

தொழில் கொள்கையில் குழப்பம இல்லை. தி. மு. க. வினருக்குள் தான் குழப்பம்.

தனியார் துறையை ஊக்குவிக்கக்கூடாதுஎன்று துரைமுருகன் கூறுகிறார், தனியார்துறைக்கு சலுகை தரவேண்டும் என்று கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்

## ப. உ.ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்த இளைஞர் காங்கிரசார்

சென்னை, ஜூலை 20- சென்னை 43வது வட்டம் இளைஞர் காங்கிரசார் ஏராளமானோர் அக்கட்சியிலிருந்து விலகி பொதுச் செயலாளர் ப.உ.ச முன்னிலையில்கழகத்தில்இணைந்தனர்.

இளைஞர் காங்கிரஸ் கட்சியினர் 43 பேர் கழகத்தில் இணைந்தனர்,

இளைஞர் காங்கிரஸ் 43-வது வட்டச் செயலாளர் ஆர் ராஜா, வி ஜம்புலிங்கம், து ராமகிருஷ்ணன், தீனதயாளன், ரங்கநாதன், மணி ஆகியோர் உட்பட 43 பேர் கழகத்தில் இணைந்தனர்.

முதல்வர் புரட்சித்தலைவரின் நேர்மையான, நீதி தவறாத ஆட்சியை பலப்படுத்த கழகத்தில் இணைந்து செயல்பட முடிவெடுத்து இணைந்ததாக அறிக்கையில் கூறியுள்ளனர்.

பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தபோது முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் ஐசரிவேலன், சி டி சிவசங்கரன் ஆகியோர்உடனிருந்தனர்.

## சொன்னதைச் செய்து நன்றி கூறச் சென்ற கழக வேட்பாளர்

சென்னை, ஜூலை 20-தேர்தல் நேரத்தில் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டு அதன் பிறகு நன்றி தெரிவிக்கப் போனார் கழக சட்டமன்ற உறுப்பினர். இச்செயலை அந்த மக்கள் பெரிதும் பாராட்டினார்கள்.

தேர்தல் நேரத்தில் வில்லிவாக்கம் தொகுதியில் போட்டியிட்ட ஜே சி டி பிரபாகரன் சேக்குமானியம் என்ற கிராம மக்களுக்கு ஒரு வாக்குறுதியைத் தந்தார்.

அந்த ஊர் மக்களுக்கு குடிநீர்வசதிக்காக8ஆண்டுகட்கு முன்பு தானியங்கி குடிநீர் திட்டம் போடப்பட்டு நிறைவேற்றப்படாமல் அப்படியே இருந்தது.

பாதி வேலை நடந்து முடிந்து குறைநிலையில் இருந்தது. அந்தக் கிராமத்தில்750பேர்வசிக்கிறார்கள்.

நான் வெற்றிபெற்றதும் இந்தக் குடிநீர் திட்டத்தை முடித்துக் கொடுத்து விட்டு நன்றி தெரிவிக்க வருகிறேன் என்று பிரபாகரன் அந்த மக்களிடம் வாக்குறுதி கொடுத்து இருந்தார்.

அதன்படி இப்போது அந்தக் குடிநீர் திட்டம் நிறைவேற்றப்பட்டு அதன் திறப்பு விழா இரண்டு நாட்களுக்கு முன்பு நடந்தது.

உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு குடிநீர் திட்டத்தைதுவக்கி வைத்தார்.

கொடுத்த வாக்குறுதியைச் செயல்படுத்திவிட்டு மக்களுக்குநன்றிதெரிவிக்க வந்த பிரபாகரனை அமைச்சர் பாராட்டினார்

இப்படிப்பட்ட மணிகளை புரட்சித்தலைவர் தேர்ந்து எடுத்துள்ளார் என்று பாராட்டினார்.

வாக்களித்த மக்களுக்கு ஜே சி டி பிரபாகரன் நன்றி தெரிவித்துப் பேசினார்.

விழாவில் ஜெகத்ரட்சகன் எம் எல் ஏயும் சிறப்புரை ஆற்றினார்.



## செண்பகவல்லி அணை சீரமைப்பு

சென்னை, ஜூலை 20- வாசுதேவ நல்லூர் தொகுதியில் உள்ள செண்பகவல்லி அணையில் சேதமடைந்த பகுதியை சீரமைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக சட்டப் பேரவையில் அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

சட்டமன்றத்தில்கேள்வி நேரத்தின்போது பதிலளிக்கையில் அமைச்சர் ராஜாமுகமது மேலும் கூறியதாவது:-

செண்பகவல்லி அணைக் கட்டும் கால்வாயும் கேரள மாநிலத்தில் மிகவும் ஒதுக்குப்புறமான இடத்தில் அமைந்துள்ளதால் தமிழ்நாட்டிற்கு வரும் தண்ணீர், பாயவேண்டிய இடத்திற்கு வந்து சேரவில்லை. ஆகவே தமிழ்நாடு அரசின் வேண்டுகோளுக்கு இணங்க மேற்படி அணைக் கட்டிற்கும், கால்வாய்க்கும் தனி சீரமைப்பு செய்ய கேரள அரசு 5 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் செலவில் மதிப்பீடு அனுப்பியுள்ளது.

இந்தமதிப்பீட்டிற்குதமிழ்நாடு அரசு அங்கீகாரம் அளித்தவுடன் சீரமைப்புப் பணிகள் மேற்கொள்ளப்படும்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

*

லாயிட்சு காலனி

பெயர் மாற்றம்:

## நடிப்பிசை புலவர் கேஆர் ஆர் நகர்

சென்னை, ஜூலை 20- "நடிப்பிசைப் புலவர் கே.ஆர்.ராமசாமி நகர்" என்று லாயிட்சுகாலனிக்கு பெயர்சூட்டப்பட்டுள்ளது இதன்படி இனிமேல் நடிப்பிசைப்புலவர் கே.ஆர். ராமசாமி நகர் என்று அழைக்கப்படும்.

*

காஞ்சி

## பன்னீர்செல்வம் ஆஸ்பத்திரியில் அனுமதி

சென்னை, ஜூலை 20- செங்கை மாவட்ட எம் ஜி ஆர் மன்றச் செயலாளர் காஞ்சி பன்னீர் செல்வம் தொண்டைக் கோளாறு காரணமாக சென்னை பொது மருத்துவமனை வார்டு எண் 21-ல் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றுவருகிறார்.

சாத்தூர், ஏழாயிரம்பண்ணை பகுதிகளில் தீப்பெட்டி தொழிற்சாலைகள்:

# கூட்டுறவு சங்கங்களை அமைத்து 40 ஆயிரம் பேருக்கு வேலை தருக

## ஆர். கே. பெருமாள் கோரிக்கை

**சென்னை, ஜூலை 20- தீப்பெட்டித் தொழில் பெருக்கத்துக்கு கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதன் மூலம் சாத்தூர் பகுதியில் 40 ஆயிரம் பேருக்கு வேலைவாய்ப்பு தரலாம் என்று கழக உறுப்பினர் ஆர் கே பெருமாள் சட்டசபையில் கூறினார்.**

தொழில் துறை மானிய கோரிக்கை மீது கழக உறுப்பினர்விளாத்திகுளம் ஆர்.கே.பெருமாள் பேசும் போது கூறியதாவது:

தொழில்களுக்காக 1978 79-ம் ஆண்டில் 21.09 கோடி ரூபாயாக இருந்ததை 1980 81ம் ஆண்டிலே 23-22 கோடி ரூபாயாக உயர்த்தப்பட்டு கிராம சிறு தொழில் வளர்ச்சிக்கு திட்டம் தீட்டப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இந்த அரசு கிராம சிறுதொழில்கள் வளர்ச்சியில் எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறது என்பதை இந்த புள்ளி விவரத்திலிருந்து தெரிய வருகிறது.

பொதுவாக இரண்டரை ஆண்டு காலமாக தீப்பெட்டித் தொழிற்சாலையிலே ஏற்பட்டுள்ள நிலைமையைப்பார்க்கவேண்டும் தீப்பெட்டிஉற்பத்தியாளர் சேவை கூட்டுறவு சங்கம் 31-3-79ல் 18 ஆக இருந்தது 80ம் ஆண்டு இறுதியில் 48 சங்கங்கள் ஆரம்பித்து, அதன் வாயிலாக கிராமப்புறங்களிலே வாழ்கின்றஏழைஎளியமக்களுக்கு தொழில் வாய்ப்பை உருவாக்கி சுமார் 96 ஆயிரம் பேர்கள் வேலைவாய்ப்பு பெற்றிருக்கிறார்கள்.

### லட்சம் பேருக்கு வேலை

அதேபோல் தொழிலாளர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் 155 ஆரம்பிக்கப்பட்டு பதிவாகி இருக்கிறது அதன் வாயிலாக 8 ஆயிரம் பெண்கள் வேலை பெற்றுள்ளனர். 81ம்ஆண்டிலே மேலும் 10கூட்டுறவு சங்கங்கள் ஆரம்பிக்க இந்த அரசு உத்தரவு பிறப்பிக்க உள்ளது.

அதன் வாயிலாக 20 ஆயிரம் ஏழை எளிய மக்கள் வேலை வாய்ப்பை பெறுவார்கள். இந்த தீப்பெட்டி தொழிற்சாலையின் மூலமாக கடந்த இரண்டரை ஆண்டுகளில் எத்தனையோ பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது சுமார் ஒன்றேகால் லட்சம் பேர் வேலை வாய்ப்பு பெற்றிருக்கிறார்கள்.

அதே அளவில் தேயிலை தொழில், தென்னைநார் தொழில், தோல் தொழில் காதி, மற்றும்கைத்தறிமூலம் டான்சி, சிட்கோ. பட்டுப் பூச்சி வளர்த்தல் போன்ற சிறுதொழில்கள்மூலம 79ம் ஆண்டைவிட லட்சக்கணக்கானவர்கள் வேலை வாய்ப்பை பெறுவதற்கு புரட்சித்தலைவர் அரசு உதவும்.

அமரர் காந்தி பேரறிஞர் அண்ணா அவர்கள் கண்ட கனவு. கிராமங்களிலே ராமராஜ்யம் ஏற்பட வேண்டுமென்று கனவை நினைவாக்குகின்ற வகையிலே புரட்சித் தலைவர் அவர்கள் புரட்சிகரமான திட்டங்களைத் தீட்டி செயல்படுத்தி வருவதை தமிழக மக்கள் நன்கு அறிவார்கள்.

தீப்பெட்டி தொழிற்சாலையைப் பொறுத்த வரையில் உரிமங்கள் பெறுவதிலே பல சிக்கல் இருக்கின்றது என்று சிக்கல்களை தவிர்க்கின்றவகையிலே முன்பிருந்த ஆர். டி எல் ஏ செயலாளர் சம்பந்தப்பட்ட அதிகாரிகளை அழைத்து கடந்த பிப்ரவரி 23-ந் தேதி ஒரு கூட்டத்தைக் கூட்டினார். அதிலே எந்த முடிவும் எடுக்கப்படவில்லை.

### சிக்கலை தீருங்கள்

அந்த சிக்கல் நீக்கப்பட்டால் இன்னும் பலர் தொழில் அமைக்க முன் வருவார்கள். வேலை வாய்ப்பு பெருகும்.

குறிப்பாக தஞ்சை, கோவை மாயவரம், நெல்லை, முகவைமாவட்ட பல பகுதிகளில் நூற்றுக்கணக்கான உரிமங்கள் பெற மனுக்கள் போடப்பட்டும் ஆரம்பிக்க முடியாத நிலை இருக்கிறது.

அதே நேரத்தில்சிறு தொழில் செய்பவர்கள் வரிச்சலுகைகேட்கிறார்கள் இன்றைக்கு வரிபளுவால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அதேபோல் கூட்டுறவுச்சங்கங்கள் ஆரம்பிக்க வேண்டுமென்றாலும் சிறுதொழிலுக்குமின்சாரம் கொடுக்க வேண்டுமென்று கேட்டாலும் உடனடியாக கிடைப்பதில்லை. 20 கூட்டுறவு சங்கம் ஆரம்பிக்க முறைப்படி அதிகாரிகள் மூலமாக அனுப்பப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

### தொழிற்பேட்டை ஏற்படுத்துக

சாத்தூர் தாலுக்காவில் மாறனேரி, செட்டியாப்பட்டி, ஏழாயிரம்பண்ணை, சத்திரப்பட்டி உப்பத்தூர கோபாலபுரம், நெல்லை மாவட்டம் கோவில்பட்டி நெல்லைநாகலாபுரம் புதூர் கல்லிடைக்குறிச்சி மேலும் வடமாநிலங்களிலும் சேர்ந்து அரசு பங்குத் தொகையுடன் 20 சங்கங்கள் ஆரம்பித்துக்கொடுத்தால் 40 ஆயிரம்பேர்வேலைவாய்ப்பு பெறுவதுடன் கிராம வளர்ச்சியும் உண்டாகும்.

என்னுடைய விளாத்திக்குளம் தொகுதியில்ஒருகூட்டுறவு நூற்பாலை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

வைப்பாறுபக்கம 100 ஏக்கர் நிலம் இலவசமாக கொடுத்து ஒரு லட்சம் ரூபாய் பங்குத் தொகையும் கட்ட முன் வருகிறார்கள்.

விளாத்திக்குளம் தொகுதியில் தொழிற்பேட்டை ஏற்படுத்தித் தர வேண்டுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ஆர். கே. பெருமாள் கூறினார்.

'மெயில்' கடிதத்துக்கு மறுப்பு:

## கழக அரசில் கிறிஸ்தவ அமைச்சர்

"எம்ஜிஆர் அமைச்சரவையில் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த அமைச்சர் இடம்பெறவில்லை. நல்ல மனம் கொண்ட எம் ஜி ஆர் சிறுபான்மையினரான கிறிஸ்தவருக்கு அமைச்சரவையில் இடம் தரவேண்டும்" என்றுமெயில் 17 7 80 இதழில் வி டி ஸ்பர்ஜியான் என்பவர்கடிதம் எழுதியுள்ளார்.

அதற்கு முக்கியத்துவம் கொடுத்து 'மெயில்' இதழும் பிரசுரித்துள்ளது.

ஆனல் உண்மை என்னவென்ருல்கைத்தறி அமைச்சர் எஸ் என் ராஜேந்திரன் மதமாச்சரியங்களில் ஈடுபடாதவர்என்றபோதிலும் அவர் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவராவார்.

ஆகவே கிறிஸ்தவருக்கு அமைச்சரவையில் பிரதிநிதித்துவம் தரவில்லை என்ற கருத்து தவருனதாகும்.

மேலும் சட்டப்பேரவைத் துணைத்தலைவராகத்தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பி எச் பாண்டியனும் கிறிஸ்தவமதத்தைச் சேர்ந்தவரே.

உடுமலை தொழிலதிபர் மூர்த்தி, அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

வின்சென்ட் வர்ணனை

## குமரி மருமகளும் கொடுமைக்கார மாமியாரும்

**சென்னை, ஜூலை 20- குமரி மருமகளிடம் கலைஞர் மாமி கொடுமைக்காரியாக நடந்து கொண்டார் என்று கழக உறுப்பினர் நாஞ்சில் வின்சென்ட் வர்ணித்தார். திமுக ஆட்சியில் குமரி மாவட்டம் புறக்கணிக்கப்பட்ட விவரங்களை அவர் விவரித்தார்.**

நாஞ்சில் வின்சென்ட் பேசியதாவது:-

ரப்பர் தொழிற்சாலை துவக்கும்விஷயத்தில்குமரி மாவட்டம் வஞ்சிக்கப்பட்டது,

குமரி மாவட்டத்தில் 50 லட்சம் டன் ரப்பர் விளைகிறது. இவ்வளவு ரப்பர் விளைந்தும் ரப்பர்தொழிற்சாலை தொடங்க முற்பட்டபோது அது முகவை மாவட்டத்திற்கு என்று தி.மு.க. ஆட்சியினர் அறிவித்தனர். குமரி மருமகளை கொடுமைக்கார மாமியாக இருந்துகலைஞர்நடத்தினர்.

இப்போது அந்தத் தொழிற்சாலை என்ன நிலையில் இருக்கிறது! பல லட்சம் ரூபாய் பாழானது.

ஆகவே பலஆயிரம் பேர்களுக்கு வேலை தரக்கூடியரப்பர் தொழிற்சாலையை குமரி மாவட்டத்தில் துவங்க வேண்டும்.

### கனிவள தொழிற்சாலை

குமரி மாவட்டத்திற மணவாளக்குறிச்சி என்ம் இடத்தில் டிட்டோனியல் என்ற கனிவளம் கிடைக்கிறது விமானம் கட்டுவதற்கு இந்தக் கனிவளம் பயன்படுகிறது.

இதற்கு ஒரு தொழிற்சாலை அமைக்கப்படவேண்டும். குமரி மாவட்டம் தென்னகத்தில் இருப்பதால் மத்திய அரசு இத்தொழிற்சாலை தேவை இல்லை என்று கருதுகிறதா?

இதற்கு ஒரு தொழிற்சாலை வந்தால் பல ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்க வாய்ப்பு ஏற்படும்.

இந்துஸ்தான்போட்டோ பிலிம் தொழிற்சாலையின் இரண்டாவது தொழிற்சாலையை கோதையாறு பகுதியில் ஏற்படுத்த வேண்டும்.

ஆலவாய் மொழிப் பகுதியில் சிமெண்ட்தயாரிக்க மூலப் பொருள் கிடைக்கிறது. ஆகவே அங்கு ஒரு சிமெண்ட் தொழிற்சாலைத் துவக்க வேண்டும்.

யூரியா தொழிற்சாலை சோடா ஆஷ் தொழிற்சாலைகள் துவக்கப்பட வேண்டும்.

குமரி மாவட்டத்தில் முந்திரி தொழிலை அரசே மேற்கொள்ள வேண்டும்

குமரி மாவட்டத்தில் விளையும் நேந்திர வாழைக்காயைப் பயன்படுத்தினுல் ரூ 5 கோடி அந்நிய செலாவணி பெறமுடியும்.

இந்துஸ்தான் டெலிபிரிண்டரின் எலக்டிரிக்டைப் ரைட்டிங்தொழிற்சாலையை நாகர்கோவிலில் துவக்க வேண்டும்.

தொழில் மானியக் கோரிக்கை குழப்பத்தின் உச்சகட்டம் என்ற துரைமுருகன் இங்கே குறிப்பிட்டார்.

எட்டாத கனிக்குகொட்டாவி விட்டநிலையில்இருப்பவர்கள் இப்படிபேசுகிறார்கள்.

மானியக்கோரிக்கைகளை படித்துப்பார்க்காத அந்த நைந்த உள்ளங்களை இத்தோடு விட்டு விடுகிறேன்.

தமிழ் மக்கள் வாழ்வு மலர தீட்டப்பட்ட திட்டங்களின் உச்சகட்டம் தான் இந்த மானியம் எனப் பாராட்டுகிறேன்.

இந்த ஆட்சி தும்பை விட்டு வாலைப் பிடிப்பதாகக் கூறினர்.

இந்த அரசு தும்பையும் விடாது-உங்கள் கொம்பையும் விடாது.

வாலும் இல்லாமல் நூலும் இல்லாமல் பறக்கும் அறுந்துபோனபட்டம் நிலையில் திமுக இருக்கிறது.

இவ்வாறு நாஞ்சில் வின்சென்ட் கூறினர்.

## எம்.எல்.ஏ. கட்கு பால்கோவா - ஐஸ்கிரீம்

சென்னை, ஜூலை 20- பால்வள மானியக் கோரிக்கை சட்டசபையில் விவாதத்துக்கு நேற்று வந்ததைத் தொடர்ந்து உறுப்பினர்களுக்கு பால்-பால்கோவா ஐஸ்கிரீம் ஆகியவை வழங்கப்பட்டன. பத்திரிகை நிருபர்களுக்கும்வழங்கப்பட்டது.

கோவைத்தம்பி வருத்தம்

# தொழில்தேவை பொருளை தருவதில் மத்திய அரசின் பாரபட்சமான போக்கு

**சென்னை, ஜூலை 20- மத்திய அரசு மூலம் நிலக்கரி போன்ற தொழில் தேவைப் பொருள்களை அளிப்பதில் தமிழகம் 4-வது இடத்தில் இருந்தது இப்படிப்பட்ட பொருள்களை மத்திய அரசு அளிப்பதில் தமிழகம் இப்போது 10-வது இடத்தில் ஆக்கப்பட்டு இருக்கிறது என்று கழக உறுப்பினர் கோவைத்தம்பி சட்டப்பேரவையில் கூறினர்.**

தமிழக அரசின்தொழில் கொள்கையில் தொழில் குழப்பம் எதுவும் கிடையாது அதிகாரத் தொல்லை தான் அதிகம் என்று அவர் கூறினர்.

தொழில்துறை மானியக்கோரிக்கை விவாதத்தில் கோவைத் தம்பி பேசியதாவது:-

தமிழ்நாட்டில் அனைத்திந்திய அண்ணா திமுக ஆட்சியில் தொழில் வளம் இல்லை என்றும், தொழில் குழப்பம் தான் உண்டு என்றும் சொன்னார்கள்.

தொழில்வளம் எப்படி இருக்கும்? தமிழ்நாட்டில் தொழிலுக்கு தேவையான, பிக்காயன், இரும்பு நிலக்கரி இவைகளை போதிய அளவு மத்திய சர்க்கார் தருவதில்லை. முதலில் இந்த வகையில் 4-வது இடத்தில் இருந்த தமிழகம், இன்று இந்தியாவில் இந்த பொருள்களை பெறுவதில் 10-வது இடத்தில் இருக்கிறது எப்படி நாம் தொழிலை பலப்படுத்த முடியும்?

### தொழில்வளம் பெருக..

குஜராத் மாநிலத்தில்கந்தாலா என்ற துறைமுகத்திலும் மகாராஷ்டிராவில் சாந்தாகுருஸ் என்ற விமான நிலயத்திலும் "டியூடி பிரி போர்ட்" என்ற அடிப்படையில் வெளி நாட்டிலிருந்து கொண்டு வருகின்ற பொருள்களை அனுமதிக்கிறார்கள்' அந்தநிலை தமிழகத்தில் ஏன் இல்லை? இருந்தால் தொழில் வளத்தை பெருக்க முடியும்.

கோவையில் தர நிர்ணயத்துறை சரியாக இயங்குவதில்லை வடநாட்டில்ராஜ்கோட் பஞ்சாப் போன்ற இடங்களில ஒரே நாளில் அத்தாட்சி வழங்குகிறார்கள் ஆனால் கோவையில், 3 மாதம் 6 மாதம்ஆகிறதுசிலநேரங்களில் அரசு பொறியியல் கல்லூரிகள் மூலமாக இது நடைபெறுகிறது. இதனல் தொழில் பாதிப்படைகிறது.

### தன்னாட்சி உரிமை

தன்னாட்சிஉரிமையோடு தொழிலுக்கு உரிமம்வழங்கும் நிலை மாநில சர்க்காருக்கு கிடைக்கும்வரை தொழிலை நாம் சிறந்த முறையில் பெருக்க முடியாது.

மோட்டார் பம்ப்செட் தொழிலுக்கு உதவ தமிழக சர்க்கார் கோவையில் டிசைன், டெஸ்டிங் சென்டர் ஒன்றை வைத்து தொழில் வளர்ச்சியை பெருக்க வேண்டும்.

விழுப்புரத்தில் உள்ளது போல், கோவை மாவட்டத்தில் பரம்பிக்குளம், ஆழியாறு, பவானிசாகர் போன்ற சதுப்பு நிலங்களில் சணல் பயிரிட்டு சணல் உற்பத்தியைப் பெருக்கி கோவை மாவட்டத்தில் சணல் தொழிற்சாலை ஒன்றை ஏற்படுத்தலாம்.

மலைகளில்தான் மூங்கில் வளரும் என்று இல்லை, கோவையில் மானாவாரி பயிராக சமவெளிகளில் மூங்கிலை விளைவித்து உற்பத்தியை பெருக்கி காகித தொழிற்சாலை ஏற்படுத்தலாம்.

குச்சி வள்ளிக்கிழங்கு கோவை மாவட்டத்தில் அதிகமாக உள்ளதால் அமராவதியில் இருப்பது போல் குளுக்கோஸ், ஸ்டார்ச் பேக்டரிகளை பொங்கலூரில் ஏற்படுத்தலாம்.

இவ்வாறு கோவைத் தம்பி கூறினர்.

## தி.மு.க. - இ. காங்கிரஸ் கட்சியினர் கழகத்தில் சேர்ந்தனர்

திருவையாறு ஜூலை 20- பூதலூர் ஒன்றியத்தைச் சேர்ந்த திருக்காட்டுப்பள்ளி பேரூராட்சியில் திமுக இ காங்கிரஸ் கிருஸ்தவ முன்னணியைச் சேர்ந்த பலர் விலகி கழகத்தில் சேர்ந்தனர்.

திமுகவிலிருந்து பி ராஜு தனக்கோடி, எஸ் ரத்தினம், எஸ் அய்யாவு, எஸ் நாச்சிமுத்து, கே பொன்னுதுரை, ஆறுமுகம், பேரூராட்சி உறுப்பினர் டி ராசாங்கம், இந்திரா காங்கிரஸ் கட்சியிலிருந்து பேரூராட்சி மன்றத்தலைவர் ஆர் சாணகிராமன் பேரூராட்சி மன்ற உறுப்பினர்கள் வி மெய்யழகன், ஜான் பீட்டர் கிருஸ்துவ முன்னணியினர் தனீஸ் தாஸ், ராயப்பன், ஆரோக்கியசாமி, அந்தோணிசாமி, ரத்தினம், மரியதாஸ், ஜேசுதாஸ், அல்போன்ஸ், பீட்டர் ஆகியோரும் மற்றும் பாட்சா மொய்தீன், கே மெய்யழகன் தங்கராஜ் ராஜரத்தினம் சந்தானம், முருகதாஸ் ஆகியோரும் விலகி கழகத்தில் இணைந்தனர்.

இவ்வாறு பூதலூர் ஒன்றிய கழக அமைப்பாளர் பழனியபெருமாள் தெரிவித்துள்ளார்.

தலைமைக் கழக அறிக்கை எண்: 84/80

## திருச்சி மாவட்டம் லால்குடி ஒன்றிய கழகத் தோழர்களுக்கு

லால்குடி ஒன்றிய அமைப்பாளராக

**எஸ் கே மாரிமுத்து**

அவைத்தலைவராக

**அன்பில் சுந்தரராஜ்**

பொருளாளராக

**பெருவளநல்லூர் முருகவேல்**

ஆகியோர் இன்று முதல் நியமிக்கப்படுகிறார்கள்: கழக சார்பு மன்றத் தோழர்கள் அவர்களுடன் ஒத்துழைத்து தொடர்ந்து கழகப் பணிகள் ஆற்றும்படி தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலோடும், பொதுச்செயலாளர் உயர்திரு ப. உ. ச. அவர்களின் அனுமதியோடும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

சென்னை-14
20 7 80

## கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள்களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்.

### முகவை மாவட்டம்

#### அருப்புக்கோட்டை

கே வி மணி - மேலத்தெரு
வீ அ வீருசேர்வை - உளக்குடி
எம் செல்லையா - சீனிமடை
எஸ் எஸ் அலி - சின்னத்தெரு
மு சுந்தரராஜன் - ஒட்டங்குளம்
ஏழுமலையான் - அம்மனேந்தல்
எஸ் எம் சாத்தையா - வரிசையூர்
பெ மு சுப்பிரமணியன் - வரிசையூர்
கே அழகர் - வரிசையூர்
சி வெள்ளைச்சாமி - வரிசையூர்
பகதூர்ஷா - வரிசையூர்
எஸ் கிருஷ்ணன் - கொங்கலாகுடி
த கிருஷ்ணன் - சின்ன கண்ணனூர்
ஆர் குமார் - அல்லிகுளம்
எல் நேரு - பரளச்சி
மு கந்தவேல் - மறவர் பெருங்குடி
வி கந்தசாமி , கிருஷ்ணபுரம்
டி. ராமசாமி - எம் ரெட்டியபட்டி
கே சந்தானம் - பாலவனத்தம்
வி வி ராகவன் - மேலப்பரளச்சி
சு சுப்பையா - வில்லுபத்திரி
மு சாயியையீத்தேஷ் - எசலிமடை
கு சிங்காரவேலன் - கூடக்குளம்
அ. பாண்டி - உச்சிநத்தம்
பெ வீரபத்திரன் - மேலராங்கியன்
ஆ செந்திவேல் - பழையனூர்
த மு வீரப்பத்திரதேவர் - எ முக்குளம்
பெ முத்தையன் - எஸ் வாகைக்குளம்
ஜி இராமசாமி - நல்லக்கம்மாளபுரம்
இ முத்துச்சாமி - கீழராஜகுலராமன்
வி ராமு - மாந்தோப்பு

### விருதுநகர்

க இராமர் - 32-வது வட்டம்
சக்திவேல் - நடுவப்பட்டி
எம் வெங்கடாசலராஜ் - ஆர் ஆர் நகர்
இ மாரிமுத்து - புதுக்கோட்டை
மா பிச்சையா - தீ சேடப்பட்டி
ச சௌந்திரராசன் - சங்கரலிங்கம்
சா சீனிவாசன் - ஆமத்தூர்
தி சுந்தரம் - கத்தாளம்பட்டிதெரு
சா சீனிவாசன் - ஆமத்தூர்
எம் இராமலிங்கம் - துலுக்கபட்டி

### ஸ்ரீவில்லிபுத்தூர்

மா சேதுராமலிங்கம் - வைத்தியலிங்கபுரம்
வேலச்சாமி தேவர் - மல்லி
எஸ். அய்யனார்தேவர் -கட்டயத்தேவன்பட்டி
கோ குருசாமி - பூவாணிக்கிராமம்
பி, ஐயனர் கொத்தங்குளம்
தை வீரபுத்திரன் - குன்னூர்
சி. ஜெயப்பிரகாசம் - சேதுநாராயணபுரம்
எம். முத்துக்குமார் - கடம்பன்குளம்
வி. வைத்தி - படிக்காசு வைத்தான்பட்டி
கா. மாரியப்பன் - அத்திக்குளம் கிராமம்
பி, வீரபத்திரன் - செங்குளம்
ஐ.சிவகாசி - வைத்தியலிங்கபுரம்
எம் பி மாசாணன் - கூமாப்பட்டி
மு கனி - துலுக்கன்குளம்
ஏ பி காலசாமி - வடக்கு வட்டம்
பா தாவீது - அத்திகுளம்
இரா பாரதி - சிங்கம்புணரி
ச பாலகிருஷ்ணன் - வெள்ளா
பி இருளப்பன் - கீழ்உப்புளிக்குண்டு
பெ பிச்சை - கொங்கணக்குறிச்சி

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

# சிறு தொழில்களைத் துவங்குவதற்கு புதிய சலுகைகள்

## அமைச்சர் கே. ஏ. கே. அறிவிப்பு

**சென்னை, ஜூலை-20 சிறுதொழில்களைத் துவங்குவதில் உள்ள விதிமுறைகளைத் தளர்த்தியிருப்பதுடன், அதற்கு நடைமுறையிலிருக்கும் கஷ்டங்களை அனுசரித்து பல சலுகைகளை அளித்திருப்பதாக அமைச்சர் கே ஏ கே கூறினர்.**

மான்யக் கோரிக்கை விவாதத்திற்கு பதிலளித்து அமைச்சர் கே ஏ. கே, பேசும்போது கூறியதாவது:-

தமிழகத்தை பொறுத்த வரைவறுமைக்கோட்டிற்கு கீழ்வாழும் மக்கள் 60 சதவிகிதம் பேர் இருக்கிறார்கள் 10 பேருக்கு ஒருவர் வேலையில்லாமலிருக்கிறார்கள் இந்த ஆண்டில் 17 லட்சம் பேருக்கு வேலைவாய்ப்பளிக்க திட்டமிட்டிருக்கிறோம்.

அனைவரின் வாழ்க்கைத் தரமும் உயர வேண்டும் என்பதில் அரசு அக்கறை காட்டி வருகிறது.

கிராமப்புற வேலைவாய்ப்பை உருவாக்குவதில் தீவிர கவனம் செலுத்தி வருகிறோம். கடந்த ஆண்டில் 2 லட்சத்து 33 ஆயிரம் பேருக்கு வேலை அளித்திருக்கிறோம். இந்த ஆண்டில் 2 லட்சத்து 65 ஆயிரம் பேருக்கு வேலைவாய்ப்பளிக்க திட்டமிட்டிருக்கிறோம்.

கடந்த 3 ஆண்டுகளில்

புரட்சித்தலைவா ஆட்சி சிறுதொழில் வளர்ச்சியில் தீவிர கவனம் செலுத்தி வருகிறது.

### ஊரக வளர்ச்சி திட்டம்

ஊரகவளர்ச்சி திட்டத்தினல்பல வேறு தொழில்கள் துவங்கப்பட்டுவருகிறது. ஒருகுடும்பத்தைச் சார்ந்த ஒருவருக்கு 5 ரூபாய் தினமும் கிடைக்குமானல் அது வறுமைக்கோட்டிற்கு மேலே போகும். ஒரு லட்சத்து 55 ஆயிரம் குடும்பம் கடந்தஆண்டில் பயன்பெற்றிருக்கிறது.

சிறுதொழில்கள் துவங்குவதில் உள்ள விதிமுறை தளர்த்தியிருக்கிறோம். நடைமுறையில் இருக்கும் கஷ்டங்களை அனுசரித்து பல சலுகைகளை அளித்திருக்கிறோம்.

தமிழகத்தில் ஆங்காங்கு கிடைக்கும் மூலப்பொருட்களை பயன்படுத்தி திட்டங்களை தீட்டுவது அவசியமாகிறது.

சிறு தொழில் வளர்ச்சி மையம் அமைக்க அரசு முடிவு செய்திருக்கிறது. இது தொழில் நடைமுறைக்கு வேண்டிய ஆலோசனைகளை அளிக்கும்.

மாவட்டத் தொழில் மையங்கள் கடந்த இரண்டரை ஆண்டுகளில் மகத்தான திருப்புமுனையை உருவாக்கி இருக்கிறது.

### டெல்லி பாராட்டு

மத்திய அரசின் சிறு தொழில்பிரிவுநடத்தும்ஒரு பிரசுரத்தில் இந்தியாவிலுள்ள 22 மாநிலங்களில் சிறுதொழில் எப்படி நடக்கிறது என்று அறிவித்திருக்கிறது. தமிழகத்தில் மாவட்டதொழில் மையங்கள் நல்ல நிலையில் உள்ளதாக எடுத்துக் கூறியிருக்கிறது.

கிராமப்புற பொருளாதாரத்தில் நல்ல திருப்புமுனையை பட்டுத்தொழில் உருவாக்கியிருக்கிறது.

இந்த ஆண்டில் 8 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் முசக்கொட்டை செடி வளர்க்க திட்டமிடப்பட்டிருக்கிறது இதனல் 4 ஆயிரம்பேருக்கு வேலை கிடைக்கும்.

சென்னை நகரிலுள்ள மக்களுக்கு நல்ல பால் வழங்க வேண்டுமென்று இந்த அரசு நடவடிக்கைஎடுத்து வருகிறது.

பஸ் போக்கு வரத்து துறையில் உள்ளது போல மாவட்ட போலீஸ் அதிகாரி தலைமையில் கண்காணிப்பு படை அமைக்க இருக்கிறோம்.

### பால் விநியோக முறை மாற்றம்

உணவுக்கு அடுத்ததாக பால் முதலிடம் வகிப்பதால் விநியோக முறையிலுள்ள குறைபாடுகளைத் தீர்க்க ஒரு நல்ல முயற்சி எடுக்க இருக்கிறது.

சென்னை நகரில் பால் விநியோக முறையை மாற்ற சிந்தித்து கொண்டிருக்கிறோம்.

விநியோகத்தில் நுகர்வோரும் இடம்பெருவதில் தவறை திருத்த முடியாது என்று கருதி விநியோகப் பிரிவை தனியாக பிரித்து அதன் நடவடிக்கைகளை நுகர்வோர் கூட்டுறவிடம் ஒப்படைக்க முடிவு செய்திருக்கிறோம்.

சென்னையிலுள்ள ஒவ்வொரு வட்டத்திலும் ஆங்காங்கே நுகர்வோர் கூட்டுறவு பால் சங்கம்அமைத்து அதன் மூலம் விநியோகிப்பதால் கொடுமைகளைக் களையமுடியும்.

அவசியமானல் இந்தசங்கங்களை உயர்மட்ட கட்டுப்பாட்டில் அமைத்து ஒரு தனி அதிகாரி நியமிக்கப்படுவார்.

இவ்வாறு அமைச்சர் கே ஏ கே கூறினர்.

## அமைச்சர் ராஜேந்திரன்-கதர் ஊழியர் சந்திப்பு

சென்னை, ஜூலை 20-அமைச்சர் எஸ் என் ராஜேந்திரனை கதர் கிராமத்தொழில் வாரிய தொழிலாளர்களும் (குறளகம்) பேரவை மாவட்டம் பொறுப்பாளர்களும்அண்ணா கதர் கிராமத் தொழில் வாரியத் தொழிலாளர் சங்கத்தலைவர் ச கணேசனும் சந்தித்து தொழிலாளர்கள் கோரிக்கை மனுவை அளித்தனர்.

தொழிலாளர்கள் கோரிக்கைகளை பரிசீலித்து ஆவனசெய்வதாக அமைச்சர் கூறினர்.

## கைத்தறி நெசவாளர் கூலி உயர்வு: ராமலிங்கம் முயற்சிவெற்றி

**சென்னை, ஜூலை. 20- கூலி உயர்வு கோரி கைத்தறி லுங்கி நெசவாளர்கள் நடத்திய போராட்டம் அனகாபுத்தூர் ராமலிங்கம் முயற்சியால் வெற்றியடைந்துள்ளது.**

கைத்தறி லுங்கி நெசவாளர்கள் கூலி உயர்வு கோரி கடந்த 2ஆம் தேதி முதல் போராட்டம் செய்து வந்தது தெரிந்ததே

கோ ஆப்டெக்ஸ் ஆலோசனைக் குழுத்தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் கே வி ராமலிங்கம் புதுப்பேட்டை ஏகாம்பரம், (மார்க்சிஸ்ட்,)பசவலிங்கம்(இந்தியகம்யூனிஸ்ட்) ஆகியோர் அமைச்சர் பண்ருட்டியை சந்தித்து கூலி உயர்வு குறித்து பேசினர். அமைச்சர் உடனடியாக மாவட்டக் கலெக்டருடன் தொடர்பு கொண்டு சம்பந்தப்பட்ட கைத்தறி லுங்கி உற்பத்தி செய்யும் நிறுவனங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தும்படி கூறினர்.

கலெக்டரின் ஆலோசனையின் பேரில் அதிகாரிகளும் லுங்கி உற்பத்தியாளர்களும் பேச்சுவார்த்தை நடத்தி சுமுகமான முடிவு எடுத்தனர்.

60×40 கெட்டி ரகம் லுங்கிக்கு ரூ 58 ஆகவும் மீடியம் ரகம் 60×40க்கு 55 ஆகவும் கூலியை உயர்த்தியுள்ளனர்,

பாவு துவைப்பதற்கு ரூ. 7 ஆக கூலி நிர்ணயம் செய்து முடிவு செய்துள்ளனர்.

அனகாபுத்தூர் ராமராமலிங்கமும், கழக அணியினரும் எடுத்த முயற்சி வெற்றி பெற்று கூலி உயர்வு கிடைத்தது நெசவாளர் மத்தியில் மிகுந்த மகிழ்ச்சியைத்தந்துள்ளது

## கண்ணமங்கலத்தில் அமைச்சர் விஜயசாரதி பேசுகிறார்

ஆரணி, ஜூலை 20-கண்ணமங்கலம் புதிய சாலையில் வருகிற 26-ந் தேதி (சனிக்கிழமை) மாலை 7 மணிக்கு கழகப்பொதுக் கூட்டம்நடக்கிறது

வி அர்ச்சுனன் தலைமை வகிக்கிறார் அமைச்சர் விஜயசாரதி, சண்முகம் எம் எல் ஏ, ஏ கே அரங்கநாதன், ஜி விஸ்வநாதன் எம் எல் ஏ, இரா ச மாறன் எம் பெருமாள் எம் சின்னக்குழந்தை டி ஆர் ஜெகதீசன் டி எத்திராசன் கே சேட்டு ஜிவேலு ஆகியோர் பேசுகின்றனர்.

## நெசவாளர்களை அடிமையாகநடத்தும் தனிநபர்கள் அமைச்சர் எச்சரிக்கை

**காஞ்சிபுரம், ஜூலை 20-நெசவாளர்களை கொத்தடிமைபோல பயன்படுத்தும் தனியார்களை இந்த அரசு விட்டுவைக்காது, தண்டித்தே தீரும் என்று கைத்தறி அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறினர்.**

காஞ்சிபுரம் காமாட்சியம்மன் பட்டு கூட்டுறவு சங்கத்தின் வெள்ளி விழாவில் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கலந்து கொண்டு விழாவை துவக்கி வைத்தார்.

வெள்ளி விழா நிகழ்ச்சிக்கு கே. எஸ். பார்த்தசாரதி தலைமைவகித்தார். சங்கத்தலைவர் ஏ.கே.ஆள்வார் வரவேற்புரை நிகழ்த்தினர்.

விழாவில் கைத்தறி துறைஅமைச்சர்எஸ்.என். ராஜேந்திரன், சிறப்புரையாற்றினர். கைத்தறி துறை இயக்குனர் வி. சங்கரசுப்பையன் வெள்ளி விழா மலரை வெளியிட்டார். முதல் மலரை எஸ். எல்லப்ப முதலியார் பெற்றுக்கொண்டார்.

முன்னாள் சங்கத்தலைவர்கள் படத்தை சென்னிமலை எம். பி. நாச்சிமுத்து திறந்து வைத்தார்.

சங்கத்தில் நெய்து வரும் உறுப்பினர்களுக்கு சொர்ணம் எம் எல் ஏ, பரிசு வழங்கினர்.

சங்க உறுப்பினர்களுக்கு காஞ்சிபுரம் தொகுதிகழக சட்டமன்ற உறுப்பினர் பி .வெங்கட சுப்பிரமணியன் பரிசளித்தார்.

சங்க ஊழியர்களுக்கு தமிழ்நாடு கைத்தறிதுறை ஆலோசனைக் குழுத்தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் எம் எல் சி பரிசு வழங்கினர்.

விழாவில் சிவசாமி எம் எல் ஏ, தனி அதிகாரி சண்முகம், வெ விஸ்வநாதன், சி ஆர் உமாபதி சி எஸ் பூஞ்சோலை, கே.டி. எஸ், மணி, ஒய்.எம்.நாராயணசாமி ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினர்.

சங்க இயக்குனர் பா. ஸ்டாலின் நன்றியுரை கூறினர்.

அமைச்சா எஸ். என். ராஜேந்திரன்பேசும்போது கூறியதாவது:-

இந்த சங்கம் குறைந்த மூலதனத்தோடு 1955ல் ஆரம்பிக்கப் பட்டதாக சொன்னார்கள்.

குறைந்த மூலதனத்தில் மிக சில உறுப்பினர்களோடு ஆரம்பிக்கப்பட்ட சங்கம் இன்று மிகப்பெரிய அளவில் உயர்ந்திருபது, வளர்ந்திருப்பது பாராட்டத் தக்கது.

தமிழகத்திற்கு பெருமை தேடித் தந்து அகில உலகிலும் புகழ்பெற்ற நம்மை விட்டு நீங்கிய பேரறிஞர் அண்ணா அவர்கள் காஞ்சியிலே பிறந்தவர் என்றாலும் அவரே இந்த சங்கத்தின் கோராபாக்டரியை ஆரம்பித்து வைத்திருக்கிறார். அவர் பாராட்டியிருப்பார். அப்படி அவராலே பாராட்டப்பட்ட இந்த சங்கத்திற்கு எங்களது பாராட்டுகள் சாதாரணமானது.

கைத்தறி நெசவாளர்கள் தனிப்பட்டவர்களிடம் சிக்கி நசுங்குகின்றனர். அப்படி நெசவாளர்களைகொத்தடிமைகளாகபயன்படுத்துபவர்களை அரசு விட்டு வைக்காது. தண்டிக்கும்.

இவ்வாறு அமைச்சர் ராஜேந்திரன் கூறினர்.

### சங்கர சுப்பையன்

கைத்தறிதுறை இயக்குனர் சங்கர சுப்பையன் பேசும்போது கூறியதாவது:-

கைத்தறிதுறையும் பால்வளத்துறையும் கூட்டுறவில் வளர்ச்சிஅடைந்திருக்கிறது அங்கத்தினர்களின் வருமானத்தை அதிகரிக்க வழி செய்கிறது.

கூட்டுறவில் செங்கற்பட்டு, வடஆற்காடு மாவட்டங்களில் முதன் முதலாக துவக்கப்பட்டது. இந்த காமாட்சியம்மன் சங்கம் தான். இப்போது இரண்டு மாவட்டங்களிலும் 30 சங்கங்கள் இயங்கி

(1-ம் பத்தி பார்க்க)

## மதுரையில் அமைச்சர் ராஜேந்திரனுக்கு மாபெரும் வரவேற்பு

மதுரை, ஜூலை 20-தமிழக கைத்தறித்துறை அமைச்சர் எஸ் என் ராஜேந்திரன் இன்று காலை விமானம் மூலம் மதுரை வந்துசேர்ந்தார்.

விமானநிலையத்தில்பாலகுருவா ரெட்டியார் பழக்கடை பாண்டி, நவநீத கிருஷ்ணன். என். ஏ. பூவலிங்கம், சந்தானம், பால்ராஜ் பரமன் ஆகியோர் அமைச்சருக்கு மாலை அணிவித்து வரவேற்றனர்.

## கொண்டியம்பதியில் நடக்கும் கூட்டம்

சென்னை, ஜூலை 20-இன்று 20ந்தேதி(ஞாயிறு) மாலை 7-மணிக்கு கொண்டியம்பதி ரங்கப் பிள்ளைத் தோட்டத் தெருவில் கழக பொதுக்கூட்டம் நடக்கிறது.

ஆர் சாமிநாதன் தலைமை வகிக்கிறார். என் விஜயபாலன் எம் எல் ஏ, ஆ மதுசூதனன், எம் பி ஜியாவுதீன், எம் வி ராமன், ஏ பாலசுந்தரம், எம் பி ஆனந்தன், விஜயன், ஏ பரமசிவம், வி சுகுமார், என் ஆர் சாமிநாதன், கே பாஸ்கர் ஜ சேகர், மற்றும் பலர் பேசுகின்றனர்.

டி எம் ஜானி குழுவினரின் கலை நிகழ்ச்சியும் நடக்கிறது.

## அமைச்சர் அரங்க நாயகத்துக்கு ஆசிரியர் கழகம் பாராட்டு

சென்னை, ஜூலை 20-கல்வி அமைச்சர் அரங்கநாயகம், கும்முடிப்பூண்டி சட்டமன்ற உறுப்பினர் ஆர் எஸ் முனிரத்தினம் ஆகியோருக்கு பாராட்டுக் கூட்டம் கும்முடிபூண்டி வட்டார தமிழ்நாடு ஆரம்ப ஆசிரியர் கழகம் தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி பட்டதாரி ஆசிரியர் சங்கம் சார்பில் நடந்தது சிராகவய்யர் தலைமை வகித்தார். இ தயாளன், எம் ஜிராசன் ,எத்திராசன் ஆகியோர்கலந்துகொண்டு பேசினர் பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.



## உலகத்தமிழ் மாநாட்டு குழு அமைப்பு: முதல்வருக்கு இலக்கியக்கழகம் பாராட்டு

(7-ம் பத்தி தொடர்ச்சி)

வருகின்றன. ஒரு சங்கமே துவக்கப்பட்ட காஞ்சிபுரத்தில் இன்று 16 சங்கங்கள் இருக்கின்றன.

இந்தசங்கங்கள் மாதத்திற்கு 60லட்சம் ரூபாய் மதிப்புள்ளபட்டுத் துணிகளை தயாரிக்கின்றன. ஆண்டுக்கு 7கோடிரூபாய் அளவுக்கு உற்பத்தி செய்கின்றன.

காஞ்சிபுரம் காமாட்சியம்மன் பட்டு கூட்டுறவு சங்கம் 17 லட்ச ரூபாய் இருப்பு வைத்திருக்கிறது. அதன் பயன் படுத்தி எதிர்காலத்தில் அங்கத்தினர்களுக்கு பயன்படும் வகையில் வீடுகட்டுவது போன்ற நடவடிக்கையில் ஈடுபட வேண்டும்,

இவ்வாறு சங்கர சுப்பையன் கூறினர்,

சென்னை, ஜூலை. 20. முன்பு புரட்சித்தலைவர் ஆட்சியால் அமைக்கப்பட்டு பின்பு குடியரசுத் தலைவர் ஆட்சியின் போது கலைக்கப்பட்ட உலகத்தமிழ்மாநாட்டுக் குழுவை மீண்டும் அமைத்து மதுரையில் மாநாடு சிறப்புற நடக்க நடவடிக்கை மேற்கொள்ளச் செய்துள்ள முதல்வர் புரட்சித் தலைவருக்கு சென்னைமாவட்ட அண்ணா தமிழ் இலக்கியக் கழகம பாராட்டுத் தெரிவித்துள்ளது.

சென்னை மாவட்ட அண்ணா தமிழ் இலக்கியக் கழகத்தின் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. மறைமலையான் தலைமை வகித்தார் மாநிலபுரவலர் குழுச்செயலாளர் கே எம் ஏ வகாப், மாவட்டப் பொறுப்பாளர் நாகை தருமன் முன்னிலையில் கூட்டம் நடைபெற்றது.

முன்னாள் குடியரசுத் தலைவர் வி வி கிரி, சஞ்சய் காந்தி, புரட்சித் தலைவரின் கார் டிரைவர் கோவிந்தன் தேர்தல் காலத்தில் கிழக வன்முறைக்கு பலியான கழகத் தோழர்களின் குடும்பத்தினருக்கும் ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்து இரங்கல் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

புரட்சித்தலைவர் தலைமையில் மீண்டும் கழக அரசு- அண்ணாவின் அரசு அமைய வாக்களித்த வாக்காளர்களுக்கு நன்றி தெரிவித்தும் மற்றும் பலவேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சென்னை மாவட்ட அண்ணா தமிழ் இலக்கியக் கழகத்தின் பொறுப்பாளராக நாகைதருமனும், தலைவராக ஆ மறைமலையானும் துணைத் தலைவராக மா சா எத்திராசனும் செயலாளராக ஆனையூர் இஸ்மாயிலும் துணைச் செயலாளர்களாக தஞ்சை இராமானுசமும் மு தமிழ் மணியும் பொருளாளராக பி டி ராகவனும் மற்றும் 16 செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

செப்டம்பர் மாதத்தில் அய்யா- அண்ணா பிறந்த நாள் விழாவைசிறப்பாகக் கொண்டாடுவதென்று ஏக மனதாகத் தீர்மானிக்கப்பட்டது.

செயலாளர் ஆனையூர் இஸ்மாயில் நன்றிகூறினர்.

Published by K.Ravindran on be half of Thangamani Publications. 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony Madras-24.

Editor:
E. PARASURAMAN.

# அண்ணா





## டைரக்டர் துரையின் 'பொற்காலம்'

கஸ்தூரி எண்டர்பிரைசஸ்சார்பில் கே.என். குஞ்சப்பன் தயாரிக்கும் "பொற்காலம்" படத்தை துரை டைரக்ட் செய்கிறார்.

இந்தப் படத்திற்காக கவிஞர் வாலி எழுதி, சங்கர் கணேஷ் இசையமைத்து எஸ். ஜானகி பாடிய பாடல் ஒன்று வாகினியில் ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

'வண்ணக் கொடியின் மடியில் விடியும் வரை சொர்க்கம் தான்'

—என்ற இந்தப் பாடல் ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

எம். ஜி. சி. சுகுமார், விஜயன், சுருளிராஜன், சத்யகலா, வனிதா மற்றும் பலர் நடிக்கின்றனர்.

தூயவன் வசனம் எழுதுகிறார். புலமைப்பித்தன் ஆலங்குடி சோமு, கவிஞர் முத்துலிங்கம் ஆகியோர் பாடல்களை எழுதுகின்றனர்.

கதை-டைரக்ஷனை துரை கவனிக்கிறார்.

கே. என். குஞ்சப்பன் தயாரிக்கிறார். இயற்கை எழில்சூழ்ந்த கிராமங்களில் 'பொற்காலம்' படப்பிடிப்பு ஆகஸ்ட் மாதம் முதல் வாரத்தில் துவங்க இருக்கிறது தொடர்ந்து 20 நாட்கள் படப்பிடிப்பு நடக்கிறது.

"அர்த்தங்கள் ஆயிரம்" படத்தின் பாடல் பதிவின் போது திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்யும் தயாரிப்பாளர் ராஜ்கண்ணு, சங்கர் கணேஷ், கவிஞர் மூத்துலிங்கம், எஸ். பி. பாலசுப்பிரமணியம்.



"மன்மதராகங்கள்" படத்தில் அருண்குமார், ஸ்ரீகீதா



"குரு" படத்தில் ஸ்ரீதேவி

## வல்வில்ஓரி டைரக்ட் செய்யும்படம்

ஸ்ரீ எட்டியம்மன் கம்பைன்சார் 'மறையாத நிலவுகள்' என்ற பெயரில் படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்!

இந்தப் படத்தில் முழுவதும் புதுமுகங்களே நடிக்கின்றனர். வந்தவாசி எஸ். ஷெரீப் தயாரிக்கிறார். மூன்றே மாதங்களில் படத்தை உருவாக்குகிறார்.

திரைக் கதையை நாவலாசிரியர் சதீஷ் குமார் எழுதியுள்ளார்.

புதுமையான கதையமைப்பைக் கொண்ட புரட்சிகரமான இந்தப் படத்தை கலையுலகில் நீண்டகால அனுபவம் பெற்றவரும், பிரபல எழுத்தாளருமான வலவில்ஓரி டைரக்ட் செய்கிறார்.

முதன்முதலாக 'அண்ணா' ஆசிரியர் பரசுராமன் இந்தப் படத்திற்கு பாடல் எழுதுகிறார்.

## 'மாதவி வந்தாள்'

'மாதவி வந்தாள்' வண்ணப்படத்தின் படப்பிடிப்பு வேலைகள் முடிந்தன.

நாத்திகம் ராமசாமி கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார். தத் ஒளிப்பதிவையும் சந்திரபோஸ் இசையமைப்பையும் கவனித்துள்ளனர். கண்ணதாசன் பாடல்களை எழுதியுள்ளார். ஆகஸ்ட் மாதம் வெளிவருகிறது.

## தனிமரம்

ஏழைப் பெண் செல்லம்மா தன் அழகைப் பருகத் துடிக்கும் ஆண்கள் மத்தியில் நெருப்பாக வாழ்கிறாள். அவளால்முரடன் மைனர்சின்னத்துரை பண்புள்ளவனாக மாறுகிறான். ஆனால்மோசக்காரன் சைக்கிள்வீரன் ராஜு நல்லவன்போல் வேடமிட்டு அவளையே ஏமாற்றி விடுகிறான். குழந்தைக்குத் தாயாகி கிராமத்தார் வசைக்கு ஆளான அவளை சின்னத்துரை காப்பாற்றுகிறான்—தாயான அவளை ஏற்கவும் தயாராக இருக்கிறான். செல்லம்மா காதலித்தவன் காப்பாற்றுவான் என்று எண்ணிச் செல்கிறாள்—தன்னைப் போலவே இன்னொருத்தியும் ஏமாந்துள்ளாள் என்பதை அறிந்து அவளுக்கு வாழ்வு தந்துவிட்டுத் தனி மரமாக விழுகிறாள்!

கதாபாத்திரங்கள் வலுவாக உள்ளன. காட்சி அமைப்புகளும் விறுவிறுப்பாக உள்ளன. 'பாசமலர்' கொட்டாரகரா படைப்பு சோடை போகுமா?

மைனர் சின்னத்துரை, செல்லம்மா இரு கதாபாத்திரங்களையும் அழகாகப் பின்னிக்கொண்டு சென்றுள்ளதற்காகவும், குணச்சித்திரங்கள் பழுதுபடாமல

எக்ஸ்ரே

அழகாக சித்தரிக்கப்பட்டிருப்பதற்காகவும் டைரக்டர் துரையைப் பாராட்ட வேண்டும்!

"கூட்டிலே ரெண்டு குருவிகள்" பாடல் காட்சியை ஒரு குடிசைக்குள்ளேயே (ஆடவைக்காமல் ஓடவைக்காமல்) ராஜேஷ்-சத்யகலா பார்வைகளை வைத்து கிளுகிளுப்பூட்டும் வகையில் பிரமாதமாக படமாக்கியுள்ளார்! பலே.... துரை!

"எத்தனையோ வாசலிலே நின்றிருப்பேன்..நீ முதல்லே உள்ளே போ" என்று தன் காதலனை விட்டுக்கொடுத்து செல்லம்மா பேசுவது போன்ற கச்சிதமான உரையாடல்களை தூயவன் எழுதியுள்ளார்.

சங்கர் இசையமைப்பில் "செல்லம்மா" "கூட்டிலே ரெண்டு குருவிகள்" பாடல்கள் இனிமையாக உள்ளன.

விஜயன் வழக்கம்போல் வருகிறார். அவர் வேடத்திற்கு கைலியும், மீசையும் கைகொடுக்கின்றன. அரிவாளைத் தூக்கிய பிறகு நடிப்பில் துடிப்பு தென்படுகிறது.

ராஜேஷ் சைக்கிள் வீரராக வந்து சத்யகலாவிடம் நன்றாக சரசமாடுகிறார், விஜயனுடன்கண்டதும் ஆத்திரப்படுவது குடித்துவிட்டு வந்து சத்யகலாவை மிரட்டுவது ஆகிய இடங்களில் நன்றாக நடித்துள்ளார்.

காலித்தனமாகப் பேசுபவன்மீது டவைக்கொட்டி சண்டைக்குச் செல்வது விஜயனுடன் மோதுவது ஆகிய காட்சிகளில் மட்டுமின்றி சோகமான கட்டங்களிலும் நன்றாக நடித்து பாராட்டைப் பெறுகிறார்! நல்ல அறிமுகம்... திறமை தெரிகிறது... வளர்த்துக் கொள்ளவேண்டும்!

செல்லம்மாவின் தம்பியாக வரும் மாஸ்டர் ரவிகுமார் நல்ல சுறுசுறுப்பு! அக்காவைப் பிரிந்து செல்லும் காட்சியில் திறம்படச் செய்துள்ளார்.

### சுருளி

வெங்காயத்தைக் கீழே கொட்டி பெண்களைப் பொறுக்கச் சொல்லி, அழகைப்பார்த்து ஏங்கும் வியாபாரியாக சுருளிராஜன் வருகிறார் நகைச்சுவை காட்சிகள் படுபச்சையாக இருப்பதால்முகத்தைச் சுளிக்கவைத்தாலும் கடைசியில் பாடம் புகட்டும் வகையில் இருப்பதால் முகம் மலர்கிறது!

மனோகரின் ஒளிப்பதிவில் இயற்கைக் காட்சிகளும். காதல்காட்சிகளும் அருமையாக உள்ளன,

#### மொத்தத்தில்

தனிமரம் என்றாலும கனிகள் குலுங்கும் மரம்!

நாகை தருமன்

(5-ம் பத்தி தொடர்ச்சி)

அவர் கூறுகிறார். சாலையில் காரில் செல்லும்போதே ஜாக்கெட், பிராவையெல்லாம் கழற்றி எறிந்து விட்டு "இப்படியே அழைத்துப் போங்கள். உங்களுக்குத்தான் தேவை" என்று கூறுகிறார்!

இப்படி எந்த மோசமான பெண்ணும் தனக்குத்தானே துகிலுரிந்து கொள்ளமாட்டாள்- ஒரு ஆண்மகனில் எதிரில்!

உடனே காதல் டூயட்! இதுபோன்ற குறைகளைத் தவிர்த்திருக்கலாம்.

படாபட் ஜெயலட்சுமி, சோடா பாட்டில் மனோரமா, சுருளிராஜன் இணைப்பு கலகலப்பைத் தருகிறது!

வெண்ணிற ஆடை நிர்மலா, விஜயகுமார். கோபாலகிருஷ்ணன், வெங்கட்ராமன், சுந்தர் ஆகியோர் குறையின்றி நடித்துள்ளனர்.

இளையராஜாவின் இசையமைப்பு, குறிப்பாக பின்னணி இசை சேர்ப்பு, சிறப்பாக உள்ளது.

ஐ வி சசி நடனக்காட்சியையும் சண்டைக் காட்சிகளையும் சிறப்பாகப் படமாக்கியுள்ளார். ரயில்வே கேட்டை மோட்டார் சைக்கிள் தாண்டும் காட்சி மேல்நாட்டு படங்களுக்கு நிகராகப் படமாக்கப்பட்டுள்ளது.

#### மொத்தத்தில்

'காளி' சண்டைப் பிரியர்களை ரசிக்க வைப்பான்.

## கலை விருந்து

நடிப்பதற்காக வந்து பாடகராக அறிமுகமான மலேயா வாசுதேவன் தன் முன்னேற்றத்திற்குக் காரணம் இளையராஜாதான் என்று கூறுகிறார். உதவியவர்களை, உருவாக்கியவர்களை மறந்து விடுவது சிறந்த குணம் என்று கருதுபவர்கள் நடுவில்

### இப்படியும்

### ஒருவர்

இப்படியும் ஒருவர்.

இப்போது ஒருபடத்தில் நடித்தாலும், பாடுவதற்கும் இசையமைப்பதற்கும் தான், தான் முதலிடம் தருவதாகக் கூறுகிறார்.

ஒரு படத்தில் சிதம்பரம் ஜெயராமன் குரலில் பாடல் ஒன்றைப் பாடியுள்ளார், அந்த இசைத்தட்டில் மட்டும் சிதம்பரம் வாசுதேவன் என்று தனது பெயரை இடம் பெறச் செய்துள்ளார்.

முதன் முதல் பாடுவதற்கு வாய்ப்பளித்த ரத்தினம் தான் 'சாமந்திப்பூ'வில் இசையமைப்பதற்கும் வாய்ப்பளித்தார் என்று பூரிப்போடு சொல்லுகிறார்.

## மக்கள் ஆதரவு பெருகக் காரணம் என்ன

### புரட்சித்தலைவர் விளக்கம்

'தனக்கு என்ன பயன் கிடைக்கும் என்று நினைப்பதில் தவறில்லை ஆனால், அதேசமயம் நாட்டைப் பற்றியும் சிந்திக்கும் நல்லெண்ணம் வேண்டும். அத்தகைய எண்ணத்தைக் கொண்டிருப்பவர்களாக மணியனும், வித்வான் லட்சுமணனும் இருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது.

ஒரு நிறுவனத்தைத் துவக்கினால் பல நடிகர் நடிகையர்களுக்கு வாய்ப்பு கிடைக்கிறது. ஆகவே எத்தனை நிறுவனங்கள் தோன்றினாலும் பலருக்கு பயன் கிட்டுகின்றது என்பதில் எனக்கு மகிழ்ச்சி.

### சுஜாதாவுக்கு பாராட்டு

திரைப்படத் துறையில் இருப்பவர்கள் எல்லோரும் மிகவும் வசதியாக இருப்பார்கள் என்ற தவறான எண்ணம் இருந்து வருகின்றது. அந்த எண்ணம் நீங்கும்வகையில் எளிமையாக வாழ வேண்டும்.

சுஜாதாவை எங்கு எந்த விழாவில் கண்டாலும் எளிமையாகவே வருவதை குறிப்பிட விரும்புகிறேன் இது பாராட்ட வேண்டிய குணம். சுஜாதாவைப் பாராட்டுவதால் ஜெயசுதாவை குறிப்பிடவில்லையே என்று கருதி விடாதீர்கள்.

மதுரைக்கு நான் அப்போது போகும் போதும் மக்கள் கூட்டம் இருந்தது இப்போதும் இருக்கிறது. நாளுக்குநாள் மக்கள் ஆதரவு அதிகமாகிறதே தவிர குறையவில்லை என்று குறிப்பிட்டார்கள்.

என்னைப் பொறுத்த வரையில் உடையிலோ, உள்ளத்திலோ, எந்தவித மாற்றமுமில்லை. அன்று போல் அதே மாதிரி உடைகள்தான். சாதாரணமாக இருந்தாலும், முதவமைச்சராகஇருந்தாலும் எங்களுடையவர், நம்முடையவர் என்றுதான் மக்கள் கருதுகிறார்கள்.

இன்னொரு வீட்டுக் குழந்தை மூக்கைச் சிந்திவிட்டால் அசிங்கமாகத் தெரியும்.

அதேசமயம்நம்முடைய குழந்தை நமது மடியில் எவ்வளவு அசிங்கம் செய்தாலும் அது நமக்கு தெரியாது. மக்கள் அப்படிநம்மை கருதவேண்டும். அதற்கேற்றபடி நாம் நடந்து கொள்ளவேண்டும்.

### புரட்சித் தலைவரிடம் போட்டியிட்டு தோற்ற நடிகை

சிறந்த நடிகையான ஒருவருக்கும் எனக்கும் அண்ணன் தங்கை என்ற முறையில் ஒரு போட்டி ஏற்பட்டது.

அடிக்கடி நீங்கள் மக்களைச் சந்திக்கின்றீர்கள். இதனால் மக்களுக்கு உங்கள் மீது இருக்கும் ஆர்வம் குறைந்து மார்க்கெட் சரிந்து விடும் என்றார்.

நிச்சயமாக நீங்கள் நினைப்பது நடக்காது என்று கூறினேன்.

அதன் பின்பும் எப்போதும் போல் அதிகமாக நான் மக்களைச் சந்தித்துக் கொண்டுதான் இருந்தேன்.

என்னிடம்போட்டியிட்ட நடிகைதான் அவருடைய கருத்தின்படி தோல்வியைச் சந்தித்தார்.

எனக்குக் கிடைத்த வெற்றி-நான் நடந்துகொண்ட முறையில் பெற்ற வெற்றி; மக்கள் முழு நம்பிக்கையை நான் பெற்றதனால் கிடைத்த வெற்றி என்று கருதுகிறேனே தவிர-என் திறமையால் பெற்றதாக நினைக்கவில்லை.

-புரட்சித்தலைவர்

(உதயம் புரொடக்சன்ஸ், மணியன் பிலிம்ஸின் இரு தெலுங்கு படங்கள் துவக்கவிழா ஜெமினி ஸ்டுடியோவில் நடந்தபோது பேசியது)



"தேநீர்" படத்தில் பாக்கியராஜ், பரீதா

## காளி

பிரம்மாண்டமான சினிமாஸ்கோப் வண்ணப் படம் என்பதற்குத் தேவையான கதை!

ஷோலே, யாதோங்கி பாரத் படத்தின்கதைகளை நினைவூட்டும் காட்சிகள் வருகின்றன!

'பழிக்குப்பழி' கதை என்றாலே பரபரப்பும் விறுவிறுப்பும் இருக்கத்தான் செய்யும் - மகேந்திரன் உரையாடல்களும்அசோக்குமார் ஒளிப்பதிவும் சேர்ந்துபடத்தின் தரத்தை உயர்த்தியுள்ளன.

சண்டைக் காட்சிகள் பெரும் பொருட்செலவில் உயிரைப் பணயம் வைத்து படமாக்கப்பட்டுள்ளன அதன் பலன் படத்தில் தெரிகிறது!

சகோதரி குழந்தைகளுடன் ஆடிப் பாடியதை நினைவுகூர்ந்தபடி கைவிலங்குடன் குழியை வெட்டுவது, தன் அறையிலேயே சண்டை நடப்பதைக் கண்டும், காணாதது போல் 'என்ன நடந்தது?' என்று ஜி.கே.யிடம் கேட்பது. வில்லன் மகனின் முதுகில்உடைந்தகண்ணாடியால்கையெழுத்திடுவது... குழந்தைகள் மொட்டையடிக்கப் பட்டிருப்பதைக் கண்டு கோபத்தோடு லாரியால் அந்தக் கடையையே மோதி தரைமட்டமாக்கி சண்டையிடுவது...

இப்படிப் பல காட்சிகளில் ரஜனிகாந்தின் ஆர்ப்பாட்டமான, ஸ்டைல் நடிப்பை ரசிக்க முடிகிறது.

சீமா இரட்டை வேடத்தில் வருகிறார். அமைதி-ஆர்ப்பாட்டம் இரண்டிலும் எடுபடுகிறார்.

படாபட் ஜெயலட்சுமியை ஜிகே காரில் அழைத்துச் செல்கிறார். போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்வதாக

(2-ம் பத்தி பார்க்க)



"சிங்காரப்பைங்கிளி" படத்தில் விஜயன், ராதிகா